அன்னாயமுதேயென்றழுமம்மாதிடர்நீக்கப்
பொன்னாகியசடைமேலொருபொலிகூடையுமேர்தித்
தென்னாதெனவென்றாடியதேவாவன்பர்தூதா
வென்னாளினியெனையாள்வதெனிறையேதமிழ்க்கிறையே. (௪)

முத்தாதிருமதுரைப்பதிமுதல்வாமறைமுனிவோர்
கத்தாகருநரியைப்பரியாக்குங்கவிக்கடலே
பத்தாவன்பர்தனையாண்டிடப்பரியூர்ந்தனைபரனே
யத்தாவடியேனுய்ந்திடவருளீந்திடுவரனே. (௫)

பொன்னாகியமேனித்திருப்போதாபொழின்மதுரை
மின்னாகியமீனாட்சியைமேவுந்திரடோளா
வுன்னாடலையார்கண்டிடவுடையாருலகானா
யென்னாடலையுன்னோடுறவாக்காயெனதமுதே. (௬)

நித்தாவரியரவப்பணிநிமலாநிமிர்சடைமேற்
கொத்தாகியகொன்றைகுளிர்மதியம்புனைகோலா
சித்தாதிருமதுரைப்பதிச்செல்வாசெழுந்தேனே
கத்தாதனைநாயேற்கருள்காட்டாயருணாட்டாய். (௭)

பார்ப்பாயருபரனேபரைபங்காபகல்வண்ணா
காப்பாயருட்கண்ணாகலைதனையேந்தியகையா
தீர்ப்பாயடியேன்றீவினைதீர்த்துன்னருளாக
மார்ப்பாயினியடியேனுடலரனேயுனதையா. (௮)

பாரும்பரிசறிவேன்பணிசெய்துன்பணிமலர்த்தாள்
கூரும்பரிசருள்வாய்குயிற்குரலாள்வலப்பங்கா

வாழெப்படிவையா தினிவந்தேயருடந்தே
தேடும்பநமீவாய்திருத்தேவா திருந்தேவா. (௯)

ஓங்காரமுமானாயுருவானாய்வெளியானா
யாங்காரமுமானாயருளானாயொளியானாய்
தேங்காயகனிநீர்சேர்ந்திடுசெயல்போலொளிர்சிவனே
வாங்காததிருப்பூதியைவந்தியடிபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்

ஆகச்செய்யுள் - ௧௱௪.

---

## பதினாறாவது - ஷை மதுரை.

திருச்சிற்றம்பலம்.

செந்தேனெழுகுந்திகழ்சோலைதிசைசூழ்மதுரைமீனாட்சி
யெந்தாய்தன்னையான்பாடவிசையாயருள்வாய்கணபதியே
பந்தேயனையநனவல்லவைபங்காதாளக்கொய்போனே
வந்தேனுனதுநாள்போற்றிவரையாதெனக்கிங்கிரங்கிடினே, ()

அம்மாமதுரைமீனாட்சியமுதேயருளேயருமருந்தே
யிம்மாநிலத்தையீன்றவளேயேகாந்தத்திலிருப்பவளே
செம்மானேந்திவலப்பாகந்திகழுந்திருவேசெழுந்தேனே
கைம்மாறில்லாப்பெருங்கருணைக்கருடபேவிரும்பிக்காப்பாயே.

காப்பாய்கயற்கண்ணேக்கத்தாற் கனமார்மதுரைத்தலைவாழ்
பார்ப்பாய்பாசவினைபோகப்பரமன்பங்கிலுறைவாழ்வே (வே
நேர்ப்பாய்ஞானவிழிதன்னைநெறியாயெனக்கீந்தருள்வாழ்வே
தீர்ப்பாயடியேன்றனைச்சீர்சேர்செய்யதிருத்தாள்சேர்த்தானே

ஆங்கேமாயைமயக்காலேயணங்கும்மக்களிருபேரு
மெங்கேகணவன்பிதாவென்றவேங்கித்தவித்துவிரங்கியழு
விங்கேயெனதுதாயென்றவேத்தியுனையான்போற்றிடவுன்
பங்கேயிருக்கும்பரமனுக்கும்வினைக்குமென்னேபராமுகமே (௪)

எல்லாவுலகுமானவனீயேகண்டங்கிலுறைபவனீ
நல்லோர்மனத்தினடிப்பவனீநானென்றவர்க்குமறைபவனீ
பொல்லாவினைகளறுப்பவனீபுகழ்மாமதுரையாண்டவனீ
செல்வாயசெல்வந்தருபவனீதேவியெனைவந்தாள்வாயே. (௫)

திங்கட்சடையோன்றிருச்சோதி திசைவாழ்மதுரைத்துரைச்
சோதி, யெங்குந்தானாய்நிறைசோதி யெல்லாவுயிர்க்குமெழிஞ்
சோதி, சங்குல்பகலாயவிர்சோதிகயிலைமலையான்கதிர்ச்சோதி,
மங்குமறிவைமாற்றியென்னைவாழ்வித்திடவாவாசோதி. (௬)

சோதியாகிச்சுடராகிச்சொல்லிலடங்காப்பூரணமா
யாதியாகியநாதியுமாயறிவுக்கறிவாய்நின்றிலங்கு
நீதியாகிநெறியானாய்நீதானென்றுநிற்குமென்னை
வாதியாமலருளம்பாவளர்மாமதுரைமகேசன்மனைவியே (௭)

அன்றுசவுணியர்க்கிரங்கியருளானந்தஞானப்பா
லொன்றுபடப்பொன்வள்ளத்தாலூட்டியாண்டவென்றாயே
நன்றுபடருநாளெனக்குநல்வழியைக்காட்டியருள்
குன்றுபடநேர்கோபுரஞ்சூழ்கூடல்வாழுங்கோமணியே (௮)

அன்னேநீயுமப்பனுமென்னகத்திற்றுயரையகற்றியருள் (யோ
முன்னோர்நால்வர்க்கிரங்கிமுறைமுறையாயடிமைகொள்ள

பின்னையாரையான் பணிவேன்பெருமெனக்குத்தரவல்லார்
பின்னோரழகுமீனம்மாவெளியாயெளியேன்றனக்கருளே. (கூ)

அருளேபோற்றியகிலமெல்லாமாளுய்போற்றியருமறைத்
திருவேபோற்றிதிசையெங்குஞ்செயஞ்செய்தாண்டசீர்போற்றி
யிருளையகற்றியெனையாளவிசைவாய்போற்றியெவ்வுயிர்க்குங்
கருவேபோற்றிசுற்பகமேகயற்கண்ணேகாக்காப்பாயே. (கம)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள்—கஞச.

## பதினேழாவது - திருவாப்பூர்.

திருச்சிற்றம்பலம்.

வளர்பாமதியையணிந்தவனைவைகைக்கரையிலிருப்பவனை
தழல்போனிறத்துத்தயாபரனைதையலிடத்தாயமர்ந்தவனை
கழலார்தண்டைகலகலெனுங்கயமாமுகத்துக்கரும்பேயோர்
நிழலாமெனக்குநல்லநெறியேயருளாப்புடையானே. (க)

தளிர்கூவிளமாமலர்சொரியுந்தண்காவுறையுமெம்பரனே
யொளிர்கூரிளமாமயிலோனையுதவித்தேவருடனே
குளிர்கூர்ந்திடநல்லருள்புரிந்தகோவேயிடபக்கொடியானே
களிகூர்ந்திடநற்கருணைசெய்துகாப்பாய்திருவாப்புடையானே.

கொங்தேனலந்தேனிழலென்றுநோக்காவுன்னையறிந்துதொழ
வந்தேனினதுமலர்ப்பதத்தில்வைத்தாள்வரதாவழகுடைய
பந்தேயனையமுலையம்மைபங்காபாசமகற்றியரு
டந்தேயுனைகான்பிரியாததலைமைநாவாப்புடையானே. (௩)

ஈசாமாசுதீர்த்தெனையாளேகாவெங்குமொளியான
வாசாபாசமகற்றியெனைவந்தாளினியுன்சொந்தாளாய்ப்
பாசாங்குசனைப்பெற்றபெருமானேபாவவிமோசனனே
யாசாவன்பர்க்கருள்புரியுமாசேயழகாப்புடையானே. (௪)

அந்தோவெல்லாந்தானெனவாபாவமுதேயருட்கடலே
நைந்தேயழுதுநான்கூவநல்லமொழியுன்திருச்செவியி
லெந்தேவின்னமேறக்கலையோவெளியேன்றனையாளீசனே
செந்தேனொழுகுஞ்செழுஞ்சோலைச் செல்வா திருவாப்புடையா
(னே

பொன்னுள்ளத்திற்பொருந்துமரிபோற்றும் புலித்தோலுடை
யானே, யென்னுள்ளத்திலிருந்தருளி யிடையின்மறைந்துவெ
னைவருத்தா, தன்னுள்ளத்திற்கனிந்தவருளூட்டியொளியவுன்
திருத்தாள், வன்னுள்ளத்திற்பொருந்தியினி வந்தாடிருவாப்பு
டை யானே. (௬)

எல்லாவுலகுந்தானெனவீசா வெளியேன்மயக்காலே (மே
பொல்லாவினைகள்புரிந்திருந்தாற் பொறுப்பதிறைக்குக் கடனு
கல்லாலின்கீழிருந்து மறைசாணமுனிவர்தனக்குரைத்த
நல்லாயென்னைகொற்றியருளுதாசல்லாப்புடையானே. (எ)

பண்டேவினைகள்பலபுரிந்து பாசவலைக்குள்ளாளாகிக்
கொண்டேனலை நரிவ்வுடலைக்கூத்தாவெல்லாம்நீயென்று
நின்றேனினியினிற்சவருணிமலாநிமிர்செஞ்சடையோனே
கண்டேயனையமொழியம்பாள்கணவாவருளாட்புடையானே.

கருணைக்காசேகற்பகமேசனகசடையிற்காசியிற்பொ
னருணைப்பதிசீர்காளத்தியானைக்காவாழ்காஞ்சிமுதன்

மருணேந்தகலுந்தலங்கடொறுமருந்தாயிருக்குமருந்தவனே
பொருணேந்திரக்கவையாமறபொலிவாய்திருவாப்புடையானே.

மருந்தேயமார்பெருவிருந்தேமானின்விழியாளிடப்பாக
விருந்தேயருளவிடபமிசையேறியெனைவந்தாள்வாயே
யருந்தேவர்க்குவிடாகலவவுணர்குழாத்தைவேரறுத்த
பெருந்தேனூறும்பெருங்கருணைப்பேறேவாழிபிரான்வாழி (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - கஎ௪.

---

# பதினெட்டாவது-திருப்பூவணம்.

திருச்சிற்றம்பலம்.

தேவர்சூழ்ந்தடிபோற்றிடுந்திருப்பூவணத்துறைசெல்வனே
யாவர்தாழ்ந்தடிபோற்றினுந்திசையாளுவாரிதுதிண்ணமே
யேவலாயடியேன்படித்திடவெண்ணினேனிசைக்கேயருட்
காவலாயடியேகொடுத்தருள்கயமுகத்துடைசகடவுளே. (௧)

தெங்குவாழ்ந்திடுசீர்பெறுந்திருப்பூவணத்துறைசெய்யனே
யெங்குவாழ்ந்திடவாரைநோக்கிடவேழையேற்கருணீயுநின்
பங்கில்வாழ்ந்திடுதாயுமல்லதுபாரிலவேறெனக்கார்துணை
தங்குமோரிடமில்லைநின்னடிசாத்தியாடிருப்பூவணா. (௨)

உன்னைநோக்குவனுன்னிடத்தெதாளிருமையைநோக்குவனல்ல
பின்னைநோக்குவதாரையாருட்பெறுதற்கிடவல்லரு (து
மென்னைநோக்கிடவேசெயுந்துயரேகவொள்ளியவிடபமே
லன்னையோடுறவாஇவக்தெனையாளுவாயருட்பூவணா. (௩)

பெருசீர்கானப்பேரூறையும்பிரானேயடியேன்பெறும்பேறே
மறுசீரடியேனினிவேண்டேன் மலர்த்தாளினிற்சேர்த்தாள்வா
[யே.

ஆணாண்பெண்ணகிலமுமாயனலாய்ச்சயிலமாகியுயர்
வானுயரியாய்மதியமுமாய்வானினிறைந்தவுடுக்களுமாய்த்
தானாய்வெளியாயொளியானசாம்பசிவனேசங்கரனே
கோனாய்நாயேன்பிழைபொறுத்துக்கொள்வாயகானப்பேரூரா.

அன்பாய்ஞானம்பெறமுன்னாளதிகதவஞ்செய்யகத்தியற்கு
முன்பாய்ச்சோதிவடிவாகிமூர்த்தியாகியருளீந்தா
யென்பாய்மாலையணிமார்பாவேகாகானப்பேரூரா
யின்பாயோதியுனைப்பணியவீவாய்கருணைவாழ்வாயே. (ரு)

தேவர்பூசித்தருள்பெற்றார்தேவாதினதுசந்நிதிமுன்
பாவலர்யாசித்தருட்டீர்த்தப்படிந்துபோற்றிப்பவந்தீர்ந்தார்
யாவருபாசித்துனைப்பணிந்தவரும்பேரின்பமடையாதார்
தாவுவாசியிடையேறித்தருவாயருள்காளூரானே. (சு)

பொன்னுள்வாலகில்லியமைப்புகன்றபழிப்பாற்பெறுசாபம்
முன்னுடைச்செய்தவள்பேர்முறைசேர்தீர்த்தந்தனக்கீந்தா(வே
யென்னுளேகப்படுமோவுன் மணமில்சேர்வடிவை யென்றே
யுன்னுளூக்கப்படவருள்வாயுடையாய்கானப்பேரூரா. (எ)

வீரசேனபாண்டியற்காவித்துருமத்தாலானபொய்மை
தீரமானசேயாகச்செய்தாய்தீர்த்தமகத்துவந்தா
வீரமானபிறையணிந்தவெழில்சேர்சடையெம்பெருமானே
டாரமானவெனதுவினைபறிப்பாயருளைகுறிப்பாயே. (அ)

திருவேதவேந்திரன்சாபந்தீர்த்தாய்தேவர்சிறைநீக்க
யுருவேயொளிசேர்சண்முகனையுகந்தாய்புழைக்கையுறுசாப
மருவேயழித்தாய்கானப்பேரன்பேகாளையற்புதமே (கே
குருவேயடியேன்குறைதீர்த்துக் கொள்வாயுனறன் குணாகழ

சிரனேவாழிகானப்பேர்ச்செல்வாவாழிசீர்மறையோ
ரரனேவாழிஞானத்தவருள்சேர்முனிவர்தாம்வாழி
பரனேவாழிபாரிலுயிர்பண்பாய்வாழிபலகலையும்
வரனேவாழிவானுலகுமடியார்குழாமும்வாழியவே. (க0)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள்-ககூச.

---

# இருபதாவது - திருவாடானை.

திருச்சிற்றம்பலம்

திருவளர்சோலைசிறந்திடு திருவாடானைவாழ்செல்வனே சிவனே
யருள்வளர்வாலையணைந்திடுதோளாவாலவாயம்பலக்கூத்தா
மருவளர்மாலைமலர்ந்திடுமார்பாமாலறியாப்பதம்பாடிக்
கருவளருழைக்கடந்திடவலவைகாதலன்மலர்ப்பதங்காட்டும் (க

ஐயனேயுலகனைத்திலுமானவப்பனேயருளுடையமூர்த்தி
செய்யனேயுனதுதிருமலர்ப்பாதந்தெரிந்துபூசனைபுரிந்துய்ய
மெய்யனேயெனதுமெய்யினிலறிவைவிரித்தருட்கோலத்தைவி
ளக்கி,யுய்யநேருதவியொளிவளர்திருவாடானைவாழொருதனிமு
தலே. (உ)

அன்னமென்னடையாளம்பிகைசிவகவல்லிவாழமுகுறுபா
கா, முன்னமென்னையுடையான்றொண்டனூழ்வலியைமுப்புரமவித்த
தூ நெஞ்சை, யின்னமின்னமதாய்ச்சிதைத்திடவழித்துன்றிருவடி
சிரமிசைசூட்டி, யின்னமின்னமுமிட்டாகமென்றனைவந்தெய்தி
டாதினிமருளீசா. (௩)

உம்பர்கட்கரசேபன்னடித்தொண்டர்க்குறுதுணையியலாதுள
தோ, செம்பொருட்கடலேதிருவடியல்லாற்றிக்குவேறில்லையெ
ன்சிவனே, வம்பனைப்பழுத்தென்னூழ்பறந்தோடவைத்துநின்
னருளினைவளர்த்து, வெம்பொருட்டுன்னையேத்திடவருளாடா
னைவாழெம்பெருமானே. (௪)

பன்னிணிலிந்தமாவிடவுருவைவருந்தயன்வரைந்தமுன்னெ
ழுத்தைக், கண்ணினுங்காணுதோடநின்கருணைக்கதிரவன்றன்னை
யெதிர்காட்டிப், பண்ணினுஞ்சிறந்தமொழியுடைப்பரவைபங்
கநின்பனிமலர்ப்பாத, முன்னிநான்பூசைபுரிந்திடவருளாடா
னைவாழொருதனிமுதலே. (௫)

அத்தனேயன்பேயகத்தினிலுதய மாகியவமுதமேயருளே,
சித்தனேசிவனேதேவனேதிருவா டானைவாழ்சிநேகவல்லியின்
மா, பத்தனேநாயேன்பயின்றுயர்களைந்துன்பாதமென்சிரசினில்
வைத்துக், மத்தனேகருணைதந்தடியேனைக்காத்திடுன்னடிமை
யாய்க்கண்ணே. (௬)

கண்ணினுண்மணியேகனியினுள்ரசமேகற்பகதருவினன்மல
ரே, பண்ணினுண்மொழியேயாரெலாமான பரிதியேபலகலை
மறைக, ளெண்ணினுமறியாவின்பமேயென்னுளேகவேற்றிய

...ருவிளக்கே, விண்ணினுள்ளொளியேயிருப்பமேதிருவாடா
னைவாழ்விரிசுடரோனே. (௮)

பண்டுநின்னடியார்படுந்துயர்நீக்கிப்பாதமீந்தருளியபரமனே,
கண்டுதேன்மொழியாள்கலந்திடுபாகாசடுக்கையங்கண்ணியார்பா
ர்பா, தொண்டுசெய்தடியேனுறுதித்திடவுனதுதூய்மலர்ப்பாத
மென்சிரசிற், கொண்டுவெம்மயலைக்குறைத்திடாடானைக்கூடு
றுறைகோலமாமணியே (௯)

ஆலமேயமுதமாகவுண்டாவப்பனேயொப்பிலாமணியே, ஞால
மேஞாலமெலாமொளியாகிநள்ளிருள்போக்கிடும்விளக்கே, சீல
மேசிவர்தம்மையாண்டருளுஞ்செல்வமேசிவபெருமானே, மேய
மேமெயென்னையாண்டருள்புரிவாயோகனேயெம்பெருமானே.

சீர்பெறுதிருவாடானையார்வாழிதேவர்களுமுனிவர்களும்வாழி,
பார்பெறுசினேகவல்லியென்றுயாள் பணிமலர்ப்பாதமும்வாழி,
நேர்பெறுமடியார்மறையவர்வாழிநீள்சுடர்வேலவர்வாழி, பேர்
பெறுமானைமுகப்பெருமானும்பேருலகனைத்தும்வாழியவே. ()

திருச்சிற்றம்பலம்

ஆகச்செய்யுள் - ௨0௪.

---

## இருபத்தோராவது - இராமேசுரம்.

திருச்சிற்றம்பலம்.

சீராய்ச்செல்வமுமாய்த்திருவானைமுகனுகி
நேராய்நின்மலனுய்நிறைமாமதிவேணியனு
யாராயுமறிவாயதற்கப்புறமாகியொன்றாய்ப்
பேராரிராமலிங்காவருளாளனையும்பேணேனே. (௧)

கண்ணாயேமூலகாயநிற்கண்டிடுமண்டங்களாய்ப்
பெண்ணாயாணாகியநிற்பேசிடுசொல்லுயிராய்
மண்ணாய்நீராகிச்சுடர்வன்னியுமாகிநின்ற
யென்னாப்ராமலிங்காவருளாரையுமேத்தேனே. (௨)

செய்யாபொற்குவடைச்சிலையாகவளைத்தவனே
பையாராடரவைப்பணியாகப்புனைந்தவனே
கையாரானையுரிகலையாகப்புனைந்தவனே
ஐயாராமலிங்காவருளாரையும்போற்றேனே. (௩)

கந்தமலர்க்குழலாள்கலைமாமகளாயகனைச்
சிந்தைவருந்தமுறத்திருவேலர்சிறையிலிட
வந்தச்சிறைநீக்கியருளீந்தனைராமலிங்கா
வுந்தன்மலரடியேதுணையாரையுமோதேனே. (௪)

திருவேதெள்ளமுதேதிகழ்சேதுவெனுந்தீர்த்தக்
கருவேகற்பகமேகயற்கண்ணிநற்காதலனே
யருவேயம்பலத்தேயருளாகநடிப்பவனே
குருவேராமலிங்காவருளாரையுங்கூடேனே. (௫)

பொன்னேயெவ்வுலகும்பொலிவாகியபேரொளியாய்
முன்னாய்முக்குணமாய்மும்மூர்த்தியுமாகிநின்ற
யென்னேநிர்க்கதிதாவெருதேறிடுமெம்பரனே
யன்னாய்ராமலிங்காவருளாரையும்போற்றேனே. (௬)

பத்தர்களெந்நினைமுப்பலனெய்தத்திருக்காசி
யுத்தமகங்கைகொணர்ந்துன்முடியிற்சொரிந்து
சித்தமதன்போடுன்சேவடிபோற்றியுய்வா
ரத்தனேராமலிங்காவருளாரையுமேத்தேனே. (௭)

அன்பேயென்னமுதேயரிராமனுனைப்பணிந்து
வின்பேபெற்றுயர்ந்தானெழிலைக்குழலிபங்கா
துன்பேபட்டுநொந்தேன் சுகமீந்து ணையாவா
யுன்போலிராமலிங்காவினியாரையுமோதேனே. (௯)

வேலன்றனையீந்துதேவர்வெவ்வினைநீக்கலையோ
காலன்றனைக்காய்ந்துமார்க்கண்டனைக்காக்கலையோ
பாவன்படுந்துயரந்தேவர்பார்க்கப்பறந்திடுமே
யாலந்தனையமுதாயுண்டவப்பனேராமலிங்கா. (௧௦)

அண்டர்புகழ்ந்தேத்துமருள்ராமலிங்கம்வாழி
தொண்டர்குழாம்வாழிசுகதீர்த்தங்களும்வாழி
வண்டனையுங்குழலாள்வரைமாதுடதங்வாழி
தண்டையொலித்திடுந்தாடிருச்சண்முகனேவாழி. (௧௦)

திருச்சிற்றம்பலம்
ஆகச்செய்யுள்- ௨௧௪.

---

## இருபத்திரண்டாவது - தேவகோட்டை

### கு. இராமசுவாமிச்செட்டியார்க்குவந்த
### நோய்நீங்கப்பாடியது

திருச்சிற்றம்பலம்.

கற்பகக்கொழுந்தேகதிரொளிவிளக்கே கயமுகத்தவுணனைக் காய்ந்த, வற்புதமணியேயரிதிருமருகா வானைமாமுகமுடையா சே, சிற்பரயோகசிவசிதம்பாத்திற்றிருநடஞ்செய்திடுஞ்சிவனே, பொற்புடன்பாடிப் போற்றினாலவேண்டும் பொருள்பெறக் கருணைகூர்ந்தருளே. (௧)

பொன்னினம்பலத்திற்பொதுநடம் புரியும்புண்ணியா புலியித ழுடுத்தாய், வன்னியும்புனலும்மதியமுமணிந்தாய் வானவர்க் காகநஞ்சுண்டா, யுன்னிலுஞ்சிறந்த துணையுமொன்றுண்டோ வூழ்வினைபோக்கிடுமருந்தே, கன்னியோர்பாகராமன்னோய் தீரக்கருணைகூர்ந்தடியனுக்கருளே. (உ)

உன்மலர்ப்பாதமுழுதுணையையா வுலகினிலுனையன்றிலை, யின்னமிப்பாசமெந்தனைச்சேராதெய்ப்பிரான்கருணையாலகற்றி, முன்னையூழ்வலியைக்குறைத்திராமன்றோய் முழுவதுமாற்றி யுன்னடியேன், றன்னையாண்டருடாதற்பராதில்லைத்தாண்ட வாதையமேலோர்பாசா. (௩)

சோதியேயுலகிலுன்னையல்லாதுதொழத்தகுதெய்வமொன்று ளதோ, நீதியேவினையைநீக்கியாண்டருளும் நின்மலாசெஞ்சி மேற்கங்கை, யாதியேமதியங்கொன்றையும்புனைந்தாயன்பர்க ளறிவினிலமரும், வாதியேராமசாமிநோயாறவன்பெனக்கருள் புரிவாயே. (௪)

வண்டுமொய்குழலாள்வனிதைகளென்றாய் மகிழ்ந்திடவலம் டமர்ந்தாய், பண்டுநின்னடியார்வினைகளைத்தீர்த்தாய்பரவையா றாதுபோய்மகிழ்ந்தா, யண்டரையலைத்தவாலமுண்டகண்டத்த ணிந்தனையம்பலத்தரசே, தொண்டனைருத்ராவன்பிணிபோ க்கிச்சுகங்கொடுத்தடியனுக்கருளே. (௫)

அப்பனேதில்லையருளொளிவிளக்கேயன்றுமுப்புரம்பொடி செய்தாய், செப்புநேர்முலையாண்மூகைதீர்த்தவன்சொற்பெ யம்பெறப்புத்தரைவென்ற, யிப்பொழுதியான்போற்றிடுமொ ழிக்கிரங்கியிவன்பிணிமுழுவதுமாற்றி, யொப்புநேரில்லாவுமை யொருபாகா வுன்னடியெனக்கருள்வாயே. (௬)

கன்னல்வின் மதனைக்கண்ணிறாற்காய்ந்தாய்கனல்படமுப்பு ரநகைத்தாய், பொன்னுலகத்தோர்புகழ்பெறவுணர்பொன் றிடமுருகனைப்பயந்தா, யென்மனந்தன்னையின்புறவைப்பதெங் ஙநயேயுமக்கரிதாமோ, வன்னையோர்பாகாவிவன்பிணிதீர்த்து ன்னடியனுக்கருடருவாயே, (எ)

வன்னியுங்குளிரமதியமுங்குளிரவானிலத்தவர்களுங்குளிரச் சென்னிமேற்கங்கைபுனைந்தவாவெங்குஞ் செயம்பெறத்திருவ ளர்கோயிற், பொன்னினம்பலத்திற்பொதுநடம்புரியும்புண்ணி யாவென்மனங்குளிர, விங்கிலத்தவருங்குளிர்ந்திடவிவனுயே ஙிடவருள்புரிவாயே. (அ)

அருந்தவரிதயங்கோவிலாக்கொள்ளுமமுதனேயவனியினல்ல, மருந்துமந்திரமாய்மாசுதீர்த்தருளி மரகதமாதுடன்விடைமே, விருந்துநின்னடியாரின்புறவருவா யிப்பிணிநீக்குவதரிதோ, கு ருந்தமாநிழலிலிருந்தமாமணியேகூத்தனேகருணைகூர்வாயே. ()

ஐயனேயிவனுயகன்றிடவிந்த வம்புவியனைத்துமைந்தெ ழுந்து, முய்யவேயுனது திருவருள்சிறந்து வோங்கநின்னடிய வர்கூட்டம், மெய்யனேயுனதுமெல்லடிவிரும்பி விரிந்தநன் மலர்கொடர்ச்சித்துச், செய்யனேசிறந்ததிருவடிபோதிற்சேர்ந் திடவருள்புரிவாயே. (கo)

எந்தையேயுனதுகிருபையாலிவனுயெளிதினிலாறிடவென து, சிந்தையேமகிழவிரணியமீந்து திருவருளுலகினிற்சிறக்க

தந்தையேதாயேசரணமென்சிரத்திற்சாத்தினேனடியனுக்கிரங்கிப், பந்தபாசத்தைவிலக்கிநின்பாதபங்கயந்தந்தருள்போற்றி

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - உ௧௫.

---

# இருபத்துமூன்றாவது - திருவாரூர்.

திருச்சிற்றம்பலம்.

திருவளராரூர்ச்செல்வனேயானைத் திருமுகமுடையவென்கோவே, யருள்வளர்மலர்த்தாளன்பொடுபோடியருச்சனைபுரிந்துறுனுய்ந்து, பெருவளம்பெற்றுப்பேருலகனைத்தும்பேசிடப்பேரறிவுற்றுக், குருவருட்பாதங்கூடிடவருள்வாய் குரைகழற்கனுதினம்போற்றி. (௧)

தந்தைநீதாய்நீசதாசிவாவடியேன் றயங்கிடாதின்னலைமாற்று, மெந்தைநீயல்லாலென்னுயிர்த்தலைவா வென்னையார்காத்திடவல்லார், சிந்தைநீவருந்தாதிருவெனவடியேன் சீர்பெறத்திருவருள்சிறந்து, கந்தநீள்மலர்த்தாள்கலந்திடக்கமலைக்கடவுளேயருள்புரிவாயே. (உ)

மங்கையோர்பாகாமணத்திருக்கொன்றை மலர்ந்திடும்மாமுடிதனினற், கங்கையுங்கனின்சேர்திங்களும்புனைந்தகண்ணுதற்கடவுளேயாரூ, ரெங்கணுயகனேயின்னிசைபாட விலங்கையாண்டவன்றனைக்காத்தாய், செங்கணுடரவப்பூண்புனைந்தாடுந் தியாகனேகருணைகூர்வாயே. (௩)

சீர்செறிதிருவாரூரில்வாழ்தியாகா திருவிடைமேலுகந்தேறி நேர்செறிந்தடியார்தனக்கருள்செய்யும் நின்மலாவென்பிஞலா ள, தார்செறிந்திலங்குந்தண்ணருள்மார்பாதையலையிடமுடை யோனே, பேர்செறிந்திலங்கும்பேரின்பவீட்டின் பேறெனக் கருள்புரிவாயே. (௬)

பொற்புறுதிருவாரூரிலுள்ளவரும் பொன்னகர்த்தேவரும் போற்றக், கற்புறுதேவியுடன்விடையேறிக் கன்றையுமரசன் காளையையு, மற்புறவெழுப்பிநல்லருளீந்த வையனேநாயினேன் போற்று. மற்புதவடிவேயடைக்கலம்புகுந்தே னையகோத்த ருள்வாயே. (௭)

பொன்னவிர்சடையார்புண்ணியாவாரூர்ப் பொற்புறுகோவி லிற்பொலியும், மன்னவாதியாகாமனோன்மணிபங்காமாதவத் தவர்களைமயக்கும், கன்னல்வின்மதனைக்கண்ணினாற்காய்ந்தகட வுளேகழலடிபோற்று,மென்னையுன்பாதத்தேற்றருள்புரிவாயெ ங்குமாகியதிருவொளியே. (௮)

செங்கிருநாதன்றிருவருள்பெற்றுச் சீர்பெறப்பூசித்ததேவ ா, சுந்தரர்க்காகத்தூதுபோய்மீட்ட சுந்தராசுரர்தினப்போற்று, மைந்தருவெட்கக்கருணையையருளு மையனேயடிமலர்போற் று, மெந்தனையுலகமாயையால்விலக்கி யுன்னடிக்கேற்றருள்வா யே. (௯)

செய்யனேதிருவாரூரில்வாழ்செல்வத்தியாகராசாவுனதருள துய்யனேருதவுமொருவனீள்பாதத் துற்றிடவிரும்பினேனெனி

சே, ரையனேயடியேனவனியிலிருக்குமளவுமுன்னடியிணைபோ
ற்றுவ், கையனுயிருந்துசருணைசேர்பாதங் கலந்திடக்கருணைசூர்
வாயே. (அ)

கருணையேயுருவமாகியமுதல்வா காசிகாளாஸ்திரிகாஞ்சி
யருணைபோர்சிறந்தவம்பலமானைக் காசமூக்குன்றநன்மதுரை
பெருமையேசிறந்தபேசருமரியதலமெலாமிருக்குமெய்பிரானே
திருவையேபொருந்திச்சீருடனிருந்துன் றிருவடிசேர்ந்திடவரு
(ளே.

உலகெலாம்நிறைந்துமொளியதாய்ச்சிறந்துமுயிர்க்குயிரான
வாபோற்றி, இலநுவாணுதலாளம்பிகைபாகஞ்சேர்ந்திடவிருந்
தவாபோற்றி, பலதலந்தோறுமிருந்தருள்செய்யும்பராபராபத
மலர்போற்றி, கலைவளாரூர்க்கணைத்தவரடிக்குங் கவின்கொள்
சீரடியர்க்கும்போற்றி. (க0)

வாழிநான்மறைகள்வானவர்வாழிமறையவரனுதினம்வாழி
வாழியானினங்கள்வாழிநற்றொண்டர்மலர்தருந்தருக்களும்வாழி
வாழியேயுலகுமவாழிசீதருமமழைதரும்வானமுமவாழி
வாழியாரூருமழவிடையேறுமாதவன்நாமமுமவாழி. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆகசெய்யுள் - உஉக.

---

## இருபத்துநான்காவது-வயித்தீசுரன்கோயில்

திருச்சிற்றம்பலம்.

சீர்செறியானைத்திருமுகச்செல்வா திருவருள்சிறந்திடுபுள்
ளூர்ப், பேர்செறிந்திலங்குபிஞ்ஞகாவென்னைப் பெற்றவாபேச

தற்கரிய, வார்செறிகொங்கைமங்கையைவலத்தில் வைத்தவா வானவர்சாற்றும், தார்செறிமலர்கடரித்திடுமோர்பாதமியனுக்கரு ள்புரிவாயே. (க)

அப்பனேநின்னையன்புடன்பாடியருச்சனைசெய்திடவிரும்பிச் செப்பினேனிதனைத்திருவருளாலே சிறந்துமிச்செகமெலாம்வி ளங்க, வொப்புநேரில்லாவும்மலரடியையுளமகிழ்ந்தனுதினம் போற்றித், தப்புநேரிதழ்வாய்த் தோகையோர்பூரகா சுகம் பெறக்கருணைகூர்வாயே. (உ)

அன்பனேயன்பேயுருவமாயன்பாருச்சனைபுரிமலரேற்கு, மி ன்பனேயின்பந்தருந்திருப்பாதாவேழையேன்றனக்குமெய்வுயி ர்க்கும், முன்பனேமுன்னோர்முப்புரந்தன்னைமுறுவலாற்பொடி படச்செய்த, வன்பனேவன்னச்சிறகுறுபுள்ளூர்வயித்திலிங் கேசனேயருளே. (ந)

திருவளர்புள்ளூர்ச்செல்வனேதிருமாறடியுமறியொணப்பா தப், பெருவளம்வேண்டிப்பின்றொடர்ந்தேனுன்பிள்ளைநானல்ல வாபிதாவே, யொருவளந்தனையுமுலகினில்வேண்டே னுயிர்க்கு யிராகியவுறவே, கருவ்ளருமைழக்கமுற்றினின்றுளிற்கலந்திடக் கருணைகூர்வாயே. (ச)

செய்யனேபுள்ளூர்ச்சிவபெருமானே செய்வதொன்றறிகிலா ச்சிறியே, னுய்யனேருதவியுன்மலர்ப்பாதவுறவுதந்துன்னிடஞ் சேர்க்கும், மெய்யனேயிந்தவுடலுடனே மேவிமௌவுநின் னருளே, பெய்யானனதுபெரும்பதம்போற்றிப் பேறுறக்கரு ணைகூர்வாயே. (ரு)

அளவிடற்கரியவெளியெலாநிறைந்த வப்பனேயன்பர்களறிவிற், புளகிதங்கொள்ளவுருவமாய்ப்பொலியும் போதனேபுள்ளுறை வேளூர், மழவிடையேறு மகிழ்னனேசெவ்வாய் மகிழ்ந்திட நோய்தவிர்த்தாண்ட, வழகனேயடியேனடைக்கலம்புகுந்தே னன்புவைத்தருள்புரிவாயே. (௬)

அரியயன்முதலாமமரராயுலகமனைத்துமாய்நிறைந்தவெண் ணையா, நரியினைப்பரியாய்ப்பாண்டியற்கீந்த ளுநின்பெருமை யாரறிவார், கரியுரிபோர்த்தகாளகண்டாநின்கழலடிசேர்ந்துற விரும்பி, வரிகொள்சிறகுப்புள்ளுவாளூரில்வந்தனனிறைந்த ருளே. (௭)

தையலைப்பாகந்தன்னில்வைத்தாண்டாய்சண்முகனுலைவந்த மா, றுய்யவெவ்வவுணராத்தினைச்சிதைத்தாயுன்றிருவருளையா ரறிவார், கையிறுளுனைதுகழலடிபோற்றக் கருத்தறியாததோர் சிறுவன், செய்யுநோறியேன்றிருப்புள்ளுருடையசெல்வனே கருணைகூர்வாயே. (௮)

மலரயன்முதலாத்தேவர்கடினமு மகிழ்ந்தருச்சனைபுரிந்தே த்தும், தலைவநின்றனிற்சரண்புகுமடியேன் றழைத்திடத்தன் ணளிகூர்ந்து, கலைவளர்மதியமென்னநல்லறிவு கலந்திடக்கரு ணையைப்பெய்து, நிலைபெறநின்றணிழலினில்வைத்தா ணிரு தனைப்பொருதபுள்ளூரா. (௯)

என்னுயிர்க்குயிரேயினியென்னசொல்லியேற்றுவேன்றிருவ டிபோற்றி, அன்னமென்னடையாள்தையலுயகிதன்னழகியவடி.

வினைபோற்றி, முன்னமோர்கொம்பைமுரித்தெழுதியநன்முக்கனென்கழலிணைபோற்றி, வன்னநீளிறகுவளர்மயிலேறும்வாரதனுக்கனுதினம்போற்றி. (கo)

அந்தணர்மிக்கவருந்தவத்தோர்களானினமரசர்கள்வாழி, பைந்தருவனையவறத்தினர்பான்மைதரும் திருப்பழமறைவாழி கந்தனீண்மலர்கொண்டானடிபோற்றுங் கையினாலுனம்வாழி, யிந்நூல்படித்தோர்கேட்டுளோரெழில்கூர்ந்தெம்பிரானடிபெறுவாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் -உகள.

---

## இருபத்தைந்தாவது-சிதம்பரம்.

திருச்சிற்றம்பலம்.

அருட்டருமையாவானைமாமுகவாவம்பலத்தாடுமெரசே
வெருட்டினைத்தீர்த்துவினைதனைத்தறித்துமெல்லடிதந்திடுமமுதே
மருட்டனைத்தீர்க்கவகையறியாமன்மயங்கினேன்மாதவமருந்தே
யிருட்டனையகற்றுஞ்சோதியேயட்பாயிரங்கியாண்டருள்புரிவா
யே. (க)

அம்பலவாணாவாறுமாமுகவாவப்பனீயையநீயருணீ (டோ
செம்பதமல்லாற்சிறியவன்போற்றிச் சேர்வதற்கோரிடமுண்
டெம்பெருமானேயேகனேயார்க்குமீசனேயென்னுயிர்க்குயிரே
உம்பர்கடலைவாவுமையவள்கணவா வுன்னிடஞ்சேர்த்தருள்வா
(யே.

வண்டுநேர்குழலாண்மங்கையோர்பாகாவானவர்மாதவரடியார், கண்டுளோர்போற்றிசெய்திடக்கனகசபையினின்றாடிடுங்கரும்பே, பண்டுநான்செய்தபாவங்களனைத்தும் பகலவன்முன்பனியாக்கித், தண்டையுஞ்சிலம்புமார்க்குமுன்றாளைச்சார்ந்திடவருள்புரிவாயே. (௩)

அண்டருக்கரியாயடியவர்க்கெளியாயாரெனக்குறவுநீயல்லாற், றெண்டருக்கேவல்செய்தொளியாதசுகத்தினில்வைத்திடுஞ்சுகனே, வண்டமிழ்ப்பாண்டிநாடுவாழ்ந்தேத்தவைகையையடைத்தவானவனே, கண்டவர்பாதங்கலந்திடவாடுங்கடவுளேயருள்புரிவாயே. (௪)

செய்யனேசெல்வா திருநடராசாசேவடிபோற்றுவோர்தன்னையுய்யனேரருளுமுத்தமாவுவமைகேதனன்றேடிடுநாதா மெய்யனேதேவதேவனேவலியமேனைவில்லாக்கியகரனே யையனேயடியேனலந்திடாதம்பொனடியிணையருள்புரிவாயே.

கானவர்வலையிற்கட்டுண்டகலைபோற்கலங்கினேனென்பனநீயறிந்து, மேனெனக்கேட்டுமிடுக்கணைத்தீரா திருப்பது மிறைக்கழகாமோ, தேனலர்கொன்றைநிறந்திடுமெய்யா திருநடஞ்செய்திடுஞ்செய்யா,நானெனுமறிவுமாதிடவருட்கணல்கியாண்டருள்புரிவாயே. (௬)

அக்கியும்பகலுமெந்தனேரமுமுன்னடியிணைகண்டுவர்ச்சித்துசிக்கையையடக்கித்திருவடிபோற்றுஞ்சீர்வரந்தந்தருளையாமந்திரிமுதலாமடியவாதனக்குமகிழ்ந்தருள்செய்தமாமணியேயெந்தனக்காராதிருக்கிடிலழகோவிரங்கியாண்டருள்புரிவாயே

கற்றவத்தோர்களறிவினின்றாய்நாயகாநானிலத்துள்ள
மற்றவரேத்துமன்றினிலாடேய்மாதவாமரகதவல்லி
யுற்றவோர்பாகாவுனையல்லாதோருறவினருலகினிலில்லை
செற்றவர்புரங்கள்செற்றவாசிறியேன்றீவினைதீர்த்தருள்வாயே

கூடலம்பதியிற்குதிரையாய்நரியைக்கொடுத்துமின்னடியனைக்காத்தில், வாடலம்பதியிலடியிணைகொடுத்தாயாதியே,நின்னை யாரறிவார், சேடனுந்தேவர்முனிவரும்பாடற்கரியநின்றிறத்தினையிந்த, மூடனோபாடவல்லவனிரங்கிமூதறிவருள்புரிவாயே.()

அற்புதக்கூத்தாவம்பலவாணவடியிணைபோற்றினேன்போற்றி, நற்பதமருளுநாயகாவுமைநாயகிமலர்ப்பதம்போற்றி, சிற்பதமருளுஞ்சிந்துரவதனன்சீறடிபோற்றினேன்போற்றி, பொற்பதந்தந்தவாறுமாமுகன்றாள்போற்றிநற்சண்டிதாள்போற்றி.

தில்லையம்பலத்திற்றிருநடம்புரியுஞ் செல்வர்பாதாம்புயம் வாழி, அல்லலையறுத்துநல்விழிதந்தவாறுமாமுகன்பதம்வாழி, யில்லையென்றிரப்போர்க்கீந்திடுவோர்க ளிமையவரிறையவர்வாழி, சொல்லுதற்கரியமறையவர்தொண்டர்சுரபியான்வையமும் வாழி. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - உசஅ.

---

## இருபத்தாறுவது-திருவண்ணாமலை.

திருச்சிற்றம்பலம்.

ஒளியார்வதனத்துண்ணாமுலையாளொருபங்குடையானை
யளியார்கொன்றையம்புலிகங்கையணியார்முடியானைப்

தெளியார்பாசத்தீவினைநீக்கித்திருவடியீவானை
யெளியேன்பாடியிணையடிபெறநல்லிசைசேர்கணபதியே. (௧)

சீர்சேரண்ணாமலையாசிவனேதிருமாலறியாத
பேர்சேர்பாதப்பேரருள்செய்வாய்பிரமாவறிவரிய
நீர்சேர்வேணிநின்மலனேநின்னிழலார்தரவல்லார்
வார்சேர்கொங்கைவனிதைமணாளாவருணீதருவாயே (௨)

அண்டர்க்கரியாயுன்றிருவாடலறியார்வல்லாரோ
தொண்டர்க்கருள்வாய்மற்றவர்தன்னைத்துயரத்துழல்விப்பாய்
சண்டைட்பொருதாளுடையானேசயிலத்துருவானே
வண்டைப்பொருதும்பூங்குழன்மங்கைமகிழ்னாவருள்வாயே (௩)

பூவார்மார்பாபுரிசேர்சடையாபொன்னார்மேனியனே
மூவாயிரவரிலொன்றாய்நின்றாய்முக்கண்ணுடையானே
பாவார்வாயார்பற்றியபாதாபரைபங்குடையானே
காவாரருணைக்கருணைக்கடலேகாவாய்காவாயே. (௪)

பொன்னார்கொன்றைபுனையுமுடியாபுலியேயுடையானே
யென்னோய்தீரவிறையேயருள்வாயெழிலேறுடையானே
சின்னூலிடையாள்சேரும்பாகாதிருவண்ணாமலையா
மன்னாவடிவார்மறிசேர்கரனேமகிழ்வாயருள்வாயே. (௫)

செய்யாசெல்வாதிருவாதிலையாதிரிசூலப்படையா
மையார்கண்டாமலைமகள்பங்காமயிலோனாய்வந்த
வையாவானோர்வாழ்ந்திடவண்டர்மாண்டிடவேவெருட்ட
கையாவருள்சேரருணைக்கரசேகாவாய்காவாயே. (௬)

திருவாழருணைத்தீவன்றனின்செயலாரறிவாரோ
பெருவாழ்வருள்வாய்பிணையாரருள்வார்பேசற்கரியானே
அருவாயுருவாயரியாயயனாய்ப்பிறைபாகனுமாய்
வருவாய்வரதாவாழ்வருள்செய்வாய்வாழ்வருள்செய்வாயே. (௭)

செங்கேநன்மல்கும்பூமகள்கேள்வன்றேடற்கரியானே
வங்கேதனுன்றன்மலரடிதேடவரையாகினின்றோனே
நொக்கேதன்சீர்சேர்நுண்ணிடையுண்ணாமுலையாள்பங்கோனே
யங்கோவங்கோவாவெனையாள்வாயருள்வாயருள்வாயே. (௮)

அருள்சேரண்ணாமலையாவுன்றாளடையும்பெரியோரை
யிருள்சேராதவின்பந்தருவாயென்றுமொருபாகா
பொருள்சேர்மறைகடேடிடுமரியபூவடியுடையானே
மருள்சேராதன்மகிழடிதருவாய்மகிழடிதருவாயே. (௯)

அப்பாவண்ணாமலையாவுன்றனம்பொன்னடிபோற்றி
செப்பாருண்ணாமுலையாளென்றாய்திருவடியேபோற்றி
யொப்பாரில்லாவொளிசேர்வேலனுயர்தாளிணைபோற்றி
தப்பாதருணந்திமுகன்றான்சார்ந்தாரடிபோற்றி. (௧௦)

அண்ணாமலையான்றாடிருநாமமறைவோர்கள்வாழி
யெண்ணார்மறைகளிருடிகடேவரெழில்சேர்பசுவாழி
தண்ணார்நீரைச்சொரிதருவானந்தளிர்பூங்காவாழி
மண்ணாளரசர்மறையோரடியார்வாழிமலிந்திடவே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - ௨௫௧.

# இருபத்தேழாவது-செருத்தணிகை.

திருச்சிற்றம்பலம்.

திருமலிசெல்வச்செருத்தணிவரையிற்சிறப்புடனினிதுவீற்றிருந்து, அருண்மலிந்தடியார்க்கமுதினையூட்டுமோறுமாமுகன்பதம்பாடிப், பொருண்மலிந்திலங்கப்பூவடிபோற்றப்பொன்னெடுங்கோவிலினுறையும், மருமலிந்திலங்குமாலையார்மார்பன்வாரணமுகன்றுணையாமே. (௧)

சீர்செறிசெல்வச்செருத்தணிதனிலார் திருமுருகானினதருள்போ, லாரறிவருள்வாராரெனையாள்வாரப்பனீயம்மைநீயையா, வார்செறிகொங்கைவள்ளிபங்காளா வரைபடவெறிந்தவைவேலா நேர்செறிந்திந்தநிழலினில்லென்றுநீயெனக்கருடருவாயே. (௨)

பொன்னவர்சிறையைவிடுத்தருள்செய்து பூம்பொழிற்செருத்தணிவரைமேல், மன்னவர்போலவிருந்தடியார்கண்மகிழ்ந்திடவருடருமமுதே, யென்னுயிர்க்குயிரேயின்பனேயென்றுமேயனலங்கிள்ளையோர்பாகா, வுன்னையேநம்பியிருக்குமிவ்வேழையுகந்திடக்கிருபைகூர்வாயே. (௩)

அன்பனேயன்பரிதயத்திலமருமமுதனேசெருத்தணிவரையி லின்பனேயின்பந் தருந்தனிமுதலேயேகனேயென்னையாட்கொண்ட, முன்பனேமுன்புசெய்வினைவிலக்கிமுன்னின்றமூதறிவருளி, யுன்பொனேர்திருத்தாடன்னிலேசேர்ப்பாயோகனேயொப்பிலாமணியே. (௪)

வானவர்நாடுமென்னதென்றுயர்ந்துவளர்ந்திடுஞ்செருத்தணி
வரையிற், றேனலர்மாலைசூடியமாதர்திருநடஞ்செய்திசைபாட,
கானவர்வளர்த்தகன்னியுந்தெய்வகன்னியுங்கலந்தடிவருட, ஞா
னமேயுருவாயிருந்தருள்வோனேநாதனேநலம்புரிவாயே. (௫)

கருணையேயுருவமாகியமுதல்வா கதிர்செறிசெருத்தணிவரை
யா, வருணைபோர்சிறந்தவம்பலமுதலாமழகியதலந்தொறுமிருந்
து, மருளையேகழித்துமலரடிகொடுத்து மகிழ்ந்தடியவர்களைக்
காத்துப், பொருளையீந்துதவும்புண்ணியாவுனதுபொன்னடியெ
னக்கருள்வாயே. (௬)

கன்னலங்கழனிசூழ்செருத்தணிகைக் கடவுளேகதிர்வடிவே
லா, வுன்மனங்கல்லோவுளமிரங்கலையோவின்னமுமேழ்வலியுண்
டோ, சின்மயரூபாசேவலங்கொடியாய் தேவரீர்பராமுகமானா,
லென்னநான்செய்வேனெவர்க்கெடுத்துரைப்பே னெந்தையே
யுகந்தருள்வாயே. (௭)

வானுலாமதியத்தவழ்திருத்தணிகை மலையில்வாழ்மாதவமகிழ்ந்
து, கானவர்மாதைவேட்டருள்செய்யக்கானகவேடனாய்வந்தாய்,
பானலந்திகழும் பத்தரைக்காக்கப் பலதிருவேடனாய்வந்தாய்,
நானிலமனைத்தும்பரந்தருள்செய்யுநாதனேகருணைகூர்வாயே

பச்சைமாமஞ்ஞைதிருநடம்புரியும்பரிசுடைச்செருத்தணித
னில்வாழ், செச்சைசூடியனற்றேவனேயுமதுதிருவடிபோற்றிடு
ஞ்சிறியேன், கொச்சைவாய்க்குதலைமொழியனென்றிரங்கிக்கு

றையெலாங்கருணையாலகற்றி, யிச்சையைவினைக்குய் வினைமை
வேரறுத்துமின்புறக்கருணைகூர்வாயே. (௯)

எல்லையில்லாதசோதியேயுலகோரேத்திடுஞ்செருத்தணிதனி லை, யில்லையென்றிரப்போர்க்கிட்டிடவிருக்குமிறைவனேயெ ன்குலவிளக்கே, யல்லலையறுத்துன்னடியரைக்காக்குமாறுமா முகப்பெருமானே, கல்லையுஞ்சூரனுடலையும்பிளந்த கடவுளே கருணைகூர்வாயே. (௧௦)

திக்கெலாமலர்க்காசிறந்திடுஞ்சீர்சேர் செருத்தணிமலைமேலிரு ந்தருளூ, முக்கணையகனேதிருமலர்ப்பாதம் முடிமிசைசூட்டி னேன்போற்றி, செக்கர்வானிறத்துச்செல்வனேயாயேசேவடிக் கனூதினைப்போற்றி, பக்குவமறியாவென்றனைக்காத்தபன்னிரு புயாசலாபோற்றி. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் ௨௭௦.

---

# இருபத்தெட்டாவது-திருப்போரூர்.

திருச்சிற்றம்பலம்.

ஆனைமுகவாவம்பலவாவாறுமுகவாவாதிசத்தி
வானம்புவனமெங்கனுநன்மணியாயொளியாய்மதிரவியாய்
ஞானவெளியாய்நானிலமாய்கலமாயெங்குந்தாளுநி
மோனமுனிவோர்க்கருள்புரியுமுருகாவருள்போரூரனே. (௧)

செந்தாமரையாடிருமருகாசெல்வாவலியவவுணர்சிரம்
பந்தாயுருளவேலெருட்டபாலாபாசவினையகற்றுங்
கந்தாகடம்பாகாங்கேயாகார்த்திகேயாகண்மணியே
வந்தேனுனதுதிருவடிக்கீழ்வைத்தாடிருட்போரூரானே. (௧)

நற்கீரற்குமருள்புரிந்தநாதாநாயேன்றனக்குனது
பொற்பாதத்தின்றுணையல்லாற்புவியில்வேறோர்துணையுளதோ
கிற்பாய்வினைவினித்திரையினெடியமனறயோன்போல்வந்து
கற்பாயிதைநீயென்றுதந்தாய்கரும்பேதிருப்போரூரானே. (௨)

அப்பொற்பாதத்துக்கடியேனுமாளாகுவனோவென்றழுது
வெம்பித்திரிந்தேன்வேன்முருகாவினையைத்துறந்துவெளியானை
யும்பற்கரியாயுன்றுடனுலகத்துழல்வோருணர்வாரோ
பைம்பொற்கிளிபோலழகுவள்ளிபங்காதிருப்போரூரானே.

பொன்னாட்டமரர்க்கருள்புரியப்புள்ளிமயிலிலினிதேறி
மின்னார்வேலைவிடுத்துவிறலவுணர்குழாத்தைவேரறுத்து
தென்னாடேறும்படிசெய்தசெல்வாசிறியேன்றனக்காக்கும்
மன்னாமணியேமணிவிளக்கேமகிடாதிருப்போரூரானே. (௫)

பைந்தாதிறைக்குமலர்தருக்கள்பாங்கிற்சூழவதிலிருந்து
கந்தாகந்தாவென்றுபலகவினசேர்பட்சிக்குழாங்கூவ (௬
நொந்தோம்நோதீர்த்தருள்வாய்நோக்காலென்றுபலர்போற்று
சிந்தாமணியேதிருக்கோவிற்செல்வாவருள்போரூரானே. (௬)

எங்குந்தானாயிருந்திலங்குமெழிலோயெளியேன்றனைக்காத்து
மங்குமறிவைவளர்த்தனதுமலர்ப்பாதத்தைப்பூசைசெய்து

பொங்குங்கருணைவெள்ளத்திற்பொருக்கிக்குளித்துப் போற்றி
செய்து, தங்கும்படிநல்லருளீந்தாய்தாதா; பொன்போரூரானே.

அன்னைபிதாநற்குருதெய்வமனைத்துநீயேயவனிதனிற்
பின்னையொருவருளரோயான்பேசற்கரியபெரியோனே
சின்னூலிடையார்வள்ளிதெய்வயானைக்கினியதேவாநற்
பொன்னுமணியாபூமுடியாபோதாவருள்போரூரானே. (எ)

செய்யாசெல்வாதிருவடிவேல் சிறக்குஞ்செந்தாமரைப்பூப்போ
லையாகதிரைகடற்செந்தில்கவின்சேர்பழனிகழுகுமலை (ற்
ஐயாவருள்சேர்பரங்குன்றமருணைதணிகைதலந்தோறும்
மெய்யாயிருந்துகருணைசெய்யுவிமலாவருள்போரூரானே. (அ)

வஞ்சப்புலனும்வேடுவனாவலையுட்படுத்திவாலறிவை
மிஞ்சும்படிக்குவளர்த்தருள்வாய்வெறியேனிதற்குவழியறியேன்
றஞ்சம்நினதுசரணல்லாற்றமியேனுக்கோரிடமில்லை
மஞ்சைப்பிளந்தவேற்படையாமயிலா திருப்போரூரானே. ()

வாழிவடிவேல்காத்தேந்தும்வள்ளலடியார்வான்வையம்
வாழிமறையோர்மலற்றருக்கள்மன்னர்பசுக்கள்மறைகோவில்
வாழிதருமநன்மைநன்னீர்வாவிகூவல்மயிலின ங்கள்
வாழியின்னூலன்போடுவாதன்றன்முன்படித்தோரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள்- உஅக.

# இருபத்தொன்பதாவது-திருப்பரங்குன்றம்.

திருச்சிற்றம்பலம்.

ஏருலகுளோர்போற்றுமின்பரக்குன்றில்வா
    ழெந்தையேவேலாயுதா
வெளியனான்செய்தகுறையேதென்றுவறிகிலே
    னெம்பிரானின்னையன்றிச்
சீருலகில்வேறுமோர்கதியெனக்கில்லையுன்
    சேவடியலாதுவேறு
சீர்வளமுமில்லையென்சிந்தையுஞ்சிந்தையாச்
    சேரநல்லருள்புரிகுவாய்
காருலவுகுழன்மாதுமக்களென்றெண்ணமென்
    கருத்ததைவருத்தாமலுன்
காலிணைப்பூசித்துமாமயலைநீக்கிடக்
    கடாட்சமருள்வாய்கந்தனே
வாருலவுதனவள்ளிமங்கைமகிழ்சுந்தரா
    வரைமாதுதந்தபுதல்வா
வாரணத்தோனுக்குவிளையதிருவள்ளலே
    வாழியருள்வாழியருளே. (௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள்-உ௮உ.

---

# சிவபாதஸ்தோத்திரபூஷணம்.

## முப்பதாவது-திருக்கழுகுமலை.

திருச்சிற்றம்பலம்.

ஓங்காரவடிவான முருகநற்கழுகுமலை
யுக்ரவடிவேலாயுதா
வுன்பாதமலர் நம்புமென்பாசவினைதீர்த்து
[redacted] கருணைமேன்மேலுமா
யாங்காரமாய்வளரவருள்புரியவேண்டினே
னையநின்கருணைவெள்ளத்
தாழ்ந்துவாழ்கன்மானமைப்பொறியைவென்றுநி
னருள்வடிவமாகியுய்வர்
நீங்காவன்றுமெய்ம்மாலையணிமாநாக்க
ளிருபுறமுநின்றிலங்கு
நீகோதிதேவநின்பாதமலர்கொண்டவென்
னெஞ்சமேபெரியசெல்வப்
போங்கார்கணீர்பருகு புணரிமேல்வேல்விட்ட
புலவனேகருணைபுரிவாய்
புண்ணியர்கண்மனதிலுறைதண்ணியகடப்பமலர்
புனைகந்தசாமிநாதா. (௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - உ௮௩.

---

# முப்பத்தோராவது-திருநாதகிரி.

திருச்சிற்றம்பலம்.

நாதகிரியென்னுமாமலையிலருள்வடிவான
நற்சோதிவேலாயுதா
நம்பினேனுன்பாதமென்பாசவினையகல
நாளுமருள்செய்துவுன்றன்
பாதபொற்பூசைசெய்பாக்கியமெனுளுமென்
பணிவிடையதாகவுய்த்துப்
பக்தராட்சகவுனதுபாதமலர்சேர்ந்திடப்
பட்சம்வைத்தருளவேணும்
காதலுற்றுறைவள்ளிகண்டுமகிழ்கொண்டிடக்
கானகத்தேநடித்தாய்
கன்றுமொழிதெய்வானையண்டமரீந்திடக்
கைப்பிடித்தகமகிழ்ந்தாய்
வாதமுற்றிடுமுனிவர்வந்தடிபோற்றிமிகு
வாலறிவுபெற்றுவாழ்வார்
வரதவோமறுமுகவவள்ளலேநின்னடியர்
வாழிமல்கிடவாழியே,

திருச்சிற்றம்பலம்.

ஆகச்செய்யுள் - உ௮௯.

---

# முப்பத்திரண்டாவது-திருவொற்றியூர்.

திருச்சிற்றம்பலம்.

முன்பனே திருவின்பமே தரு முன்னவாவடி போற்றினே
னன்பனே யெனையாண்ட வேலவர்க்கப்பனே யருளாகனே
யின்பனே யெழிலம்மைசேர்ந்தவிடத்தனே யடியேன்றனக்
குன்பொன்னார் பதந்தன்னையீந்தருளொற்றியூருறையோகனே, க

அன்னை சுந்தரிக்கழகுசேர் மணவாளனே யடியார்கட
மின்னனீக்கிடுமெந்தையே யுலகெங்குமாகியவித்தையே
கன்னநீன் சுவைகாட்டி நின்கழற்காலிற்பிள்ளையைக்கூட்டி ஞ
யென்னைநின்னடிக்கேற்றுவாய் திருவொற்றியூருறையேகனே. ()

திருஞ்செல்வமுஞ்சேர்ந்தவூருஞ்சிறந்தசோலையும் வாவியு
மேருந்தோற்கவிளங்குகோபுரமேவுங்கோவிலின்மேயவா
ஆரும்பேருமுருவுமின்றியுமுள்ளதாயுமுடையவா
வாருமென்றனைக்காருமொற்றியூர் வள்ளலேயருள்வள்ளலே (௩)

அப்பனே நினதடியையல்லதிங்காரை வேண்டியலைகுவேன்
செப்புநேர் முலைமங்கைபாகனே சீர்தருஞ்சிவலோகனே
யெப்பநின்னடிசேருவேனிக மெய்திடாவகைவாழுவே
னொப்பவொன்றிலதானவொற்றியிலொருவனேயருளொருவ
னே. (௪)

எங்குமாகியவீசனே யெளியேன்படுந்துயர் நீக்கிநின்
பங்குசேர்த்தினியாளுவாய் திருப்பாரில்வேறெனக்காரிலை
திங்கள் சூடியசெல்வனே திகழ்செக்கர்வானிறத்தேவனே
யெங்கடாய்க்கிடமீந்தவாவருளொற்றியூருறையீசனே. (௫)

முத்துநேர்நகைச்சங்கிலிக்கருண்முற்றளித்திரைவேலையிற்
சித்துருபமெடுத்துவந்துசிறந்தசுந்தரன்றன்னைநீ
கொத்துமாமலர்மகிழடிதனிற்கூறுசத்தியமொன்றுகேட்
டொத்துவாழெனச்சொற்றவாவருளொற்றியூருடையோகனே

அடியவர்க்கருள்செய்யவேயுருவாகுமற்புதவண்ணலே
வடிவுசேர்ந்திடுபாகனேவளர்மான்மழுக்கரம்வைத்தவா
பொடிகளார்ந்திடுமாகனேபுலித்தோல்புனைந்திடுபுண்ணியா
கொடியமாயையைநீக்கிநின்னருள்கூட்டுகோவொற்றியூரனே.

கொன்றைசூடியகோலனேயறக்கோதைபங்குடையாகனே
கன்றைவீசியகண்ணனன்றேடியகாலனேகடையூரனே
குன்றைநீள்சிலையாக்கிமும்மலக்கோட்டைமாளநகைத்தவா
வொன்றைவேண்டிலமொற்றியூருடையொருவனேயுளமுன்ன
தே. (அ)

செய்யனேதிருக்கையனேதிகடவிபாகமதானநன்
மெய்யனேயருள்வேலனாகியவேடனேயருண்மேலனே
துய்யனேசகலோகனேசுகமேதருந்திருப்பாதனே
யையனேநினையண்டினேனருளொற்றியூருறையப்பனே. (௯)

போற்றினேன்றிருப்பாதமேதுணை புகலவேறிடமில்லையிக் கூற்றினேர்மலக் கூட்டிலைம்புலக் கூத்தர்கூத்தையொழித்தரு ளேற்றனேர்கொடியெந்தையேயென தெண்ணமுன்றிருச்சிந் தையே, சாற்றினேன்றிருவொற்றியூருறை தந்தையேயருட்கந் தையே. (௧௦)

வாழிநான்மறைவையம்வானம்மழைதரும்முகில்வாழிசீர்
வாழிவேந்தர்கண்மாமலர்த்திருமாதவத்தர்கள்வாழியூர்
வாழியந்தணர்வள்ளலாரடியார்களானினம்வாழிநேர்
வாழியிக்கவிபாடியொற்றியில்வரதனாரடிவாழியே. (௧௧)

ஆகச்செய்யுள் - ௨௧௫.

திருச்சிற்றம்பலம்.

## போற்றிவிருத்தம்.

வண்டமிழ்ச்சிறக்கச்செய்தவாரணமுகன்றாள்போற்றி
யண்டமையலைந்தவாலமடக்கியகண்டாபோற்றி
தொண்டரைப்பசிநோய்தீர்த்துத்தூதுபோய்மீட்டாய்போற்றி
சண்டனைமார்க்கண்டர்க்காய்ச்சாடியசரணைப்போற்றி. (௪)

பாடவுமறியேன்பதவுரையறியேன்பத்தர்கள்வலையினிற்சிக்கி மாடரவப்பூணணிந்தவன்பாதத்தருளினாலன்புடன்சொன்னேன், நேடவுமரியவரன்றிருத்தொண்டர் சேவடிக்கடியவரடியே, னாடவுமாடியமரவுமானோனென்றுபோற்றிவாழ்வீரே,

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
வாழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்.

---

௬௧-வது பக்கத்தில் பதிநான்காவது என்பதைப்
பதினான்காவது எனத்திருத்துக.

# சிவபாதஸ்தோத்திரபூஷணம்.

முற்றிற்று.

உ

சிவமயம்.

# புத்தகவிளம்பரம்.

| | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|
| தமிழ்ப்பேரகராதி | ௨ | ௮ | ,, |
| சிவக்ஷேத்திராலயமகோற்சவ உண்மைவிளக்கம் | ,, | ௪ | ,, |
| ஏகாதசிபுராணம் அரும்பத உரையுடன் | ,, | ௬ | ,, |
| சைவபூஷணசந்திரிகை | ,, | ௨ | ௪ |
| கதிர்காமக்கலம்பகம் | ,, | ௧ | ௬ |
| பட்டினத்துப்பிள்ளையார்புராணம் மூலமும் உரையும் ௬-பாரச்சஞ்சிகை ஒன்றற்கு விலை | ,, | ௬ | ,, |

வேண்டினோர் யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி, புதுச்சந்நிதிக் கந்தசுவாமிகோயிற் றருமகர்த்தரான ஸ்ரீமத் க-நாகப்பபிள்ளை அவர்களிடத்திற் பெற்றுக்கொள்வாராக.

இங்ஙனம்,

நா. க.